[13th March 1961

கொடுக்க வேண்டும். அப்படியில்லையானால் அந்த நிலங்களைப் புஞ்சை நிலங்களாகக் கருதி அவைகளை புஞ்சை நிலங்களாக மாற்றுவதற்கு ஏதாவது பரிசீலனை செய்யப்படுமா? அப்படி மாற்றுவதற்கு ஏன் சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்ளக் கூடாது?

THE HON. SRI M. A. MANICKAVELU: தண்ணீர் இல்லாமல் பயிர் சாவியாகப் போனால் அதற்கு ரெமிஷன் கொடுக்கப்படுகிறது. இதில் என்ன சங்கடம் இருக்கிறதென்றால் அவைகள் பாலாறு பேசின் ரூல்ஸ்க்கு உட்பட்ட ஏரிகள். ஆகையினால் பாலாறு பேசின் ரூல்ஸ் திட்டப் பிரகாரம் அவைகளுக்கு அதிகப்படியான தண்ணீர் கொண்டு வர ஏற்பாடு பண்ணுவதற்கு இல்லை.

SRI S. M. ANNAMALAI: இந்த பாலாறு பேசின் ரூல்களை ரத்து செய்து அந்த ஏரிகளுக்கு ஏன் தண்ணீர் கொண்டு வரக் கூடாது? அல்லது அங்கே இருக்கக்கூடிய நிலங்களை ஏன் புஞ்சை நிலங்களாக மாற்றக் கூடாது. தண்ணீர் இல்லாவிட்டால் ஏன் அதிகப்படியாக வரி வசூல் செய்து கொண்டிருக்க வேண்டும்?

THE HON. SRI M. A. MANICKAVELU: புஞ்சை நிலங்களாக மாற்றுவதற்கு விண்ணப்பம் செய்து கொண்டால் அதைப்பற்றி பரிசீலனை செய்யப்படும்.

*Revenue (Kanyakumari district)*

* 772 *Q.*—SRI T. T. DANIEL: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) the total amount of revenue of the Kanyakumari district during the year 1959-60; and

(*b*) the amount under each head?

THE HON. SRI M. A. MANICKAVELU: (*a*) Rupees 1,83,12,073-90 nP.

(*b*) A statement [a] is placed on the table of the House.

SRI T. T. DANIEL: From the statement [a] placed on the table of the House, it appears that the total income from that district is nearly Rs. 1·8 crores. May I know whether the income that is derived from the State Transport Department, which I understand is on an average Rs. 7,000 to 8,000, has also been taken into account and if not, why not? May I also know the amount that our Government will be entitled to get in respect of the ileminite and monsosite factories that are taken over by the Government of India and whether that amount has also been taken into account?

THE HON. SRI M. A. MANICKAVELU: Sir, as for the income from the Transport Department, there is an item 'Tax on Vehicles' working out to Rs. 11 lakhs. Probably, that may relate to what the hon. Member is referring. As for the monosite business, I have no information and the hon. Member may put a separate question.

---

[a] Printed as Appendix I on page 325 infra.

13th March 1961]

SRI N. R. THIAGARAJAN : காஷ் ரெமிட்டன்ஸ் என்ற இனத்தின் கீழ் சுமார் 86 லட்சம் ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதன் முழு விவரம் தெரியவில்லை. அதைப்போலவே கல்விக்காக மட்டும் இரண்டு கோடி ரூபாய்க்கு மேல் செலவு செய்யப்பட்டிருக்கிறது. அதாவது வரவுக்கு மேல் அதிகமாக செலவு செய்யப்பட்டிருக்கிறது. மற்ற ஜில்லாக்களைவிட அங்கு வரவுக்கு மேல் செலவு செய்யப்பட்டிருக்கிறது. அதன் காரணம் என்ன? காஷ் ரிமிட்டன்ஸ் என்று இருப்பதற்கு விவரம் என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : தமிழ் நாட்டில் வரவு எவ்வளவு என்று பார்த்து அந்த அளவில் செலவு செய்வது என்பது கிடையாது. அது இந்த அரசாங்கத்தினுடைய கொள்கை அல்ல. மாகாண வருவாயை மொத்தமாக எடுத்துக் கொண்டு எந்தெந்த இடங்களுக்கு என்னென்ன தேவையோ அந்த அடிப்படையில் தான் செலவு செய்யப்படுகிறது.

*Girls' hostel (Gudiyatham)*

*773 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) குடியாத்தத்திலுள்ள சர்க்கார் பெண்கள் பயிற்சிப் பள்ளி மாணவிகள் தங்குவதற்கான விடுதிகள் எத்தனை இடங்களில் உள்ளன?

(இ) மாதம் வாடகை எவ்வளவு?

(உ) 1959-60-ல் மேற்படி விடுதிகளில் எத்தனை முறை திருட்டுப் போயிற்று?

(எ) என்னென்ன? எவ்வளவு மதிப்புடைய சொத்து திருட்டு போனது? திருட்டுப் போன சொத்து கிடைத்து விட்டதா?

(ஐ) சர்க்கார் கட்டடம் கட்ட உத்தேசம் உண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) The hostel is accommodated in two private buildings.

(இ) Rs. 150 for both the buildings.

(உ) Only once.

(எ) The loss by theft included (1) cash of Rs. 19 50 nP. belonging to four students and (2) three fountain pens, one soap and one nose ornament. The value of the articles is not exactly known. The articles lost could not be recovered.

(ஐ) No, Sir.